தென்றீர் முனிநாதாஎப்படியோ முழுதுஞ்சொல்வீர், பின்னங்கே நதிமூல மப்பூவென்றீர் பிசகாமல்வொவ்வொன்றின் சேதியெல்லாம், பொன்னிங்கேயிந்தாலும் வேண்டாம்சுவாமிபொருள்சொல்லும் பொன்கோடிக்கொக்குந்தானே. (சுூ௰க)

ஒக்குந்தான்கொக்குபோல் பார்த்தபோதுஓமென்றவிந்துவட்டத் துள்ளேசென்று, சொக்குந்தான்சொர்ணவிந்துசிவமதாச்சு சொற்பமென்றுஎண்ணுதே அகாரமாச்சு, மெய்க்குந்தான்உச்சியுள்நாவுமேலே மேலொழுகுமமுர்தந்திமூலமாச்சு, சிக்குந்தான்சிவஞ்சிரசில் கெங்கையைர் சின்மயனேசிவகங்கைய்காரமாச்சே. (சுூ௰உ)

ஆச்சய்யா அடியேனுக்கனுக்கிரகித்தீர் அடியேனுங்கண்டுமதையுண்டேனையா, பேச்சையாசூதரசமென்றுஞ்சொன்னீர் பெருமையுள்ளயிவ்விரண்டும்பேசுவீரிங், வீச்சையாய்விவேகிகள்தான் யெழும்பொட்டாமல் விந்துவென்றபாம்பையுண்டால் சூதமாச்சு, பாச்சையாவுந்தனுக்குச்சொன்னேனேயா பற்பலவாய்தெரித்ததனுல் ரசமாய்ப்போச்சே. (சுூ௰௩)

ரசமாகத்தெரித்ததுதான் அகாரமாச்சு ரவைரவையாய்த் தெரித்தரசம் வொன்றாய்ச்சேர்ந்து, நிசமாய்சேர்ந்துண்பார்க்கு சூதமாச்சு நினைவைபெழும்பொட்டாமல் வுண்டதாலே, எசமானுப்போகாதே சொன்னேனென்று எவர்கள்வந்தாலும்முன்னேவணங்கிநில்லு, விசமாய்கையிதுவப்பா வறிந்துகொள்ளு விவரிப்பேன் வங் வகாரவாறு கேளே. (சுூ௰௪)

வாறுப்நீவழியாகச்சொல்வேனப்பா வழியறியாலோகர்செய்யும் வாதுபோலே, போறுப்நீமூச்சிழுத்துமுறடாதேகேள் பொருளான ரேசகந்தானென்று சொல்லி, தேறுப்நீபாலந்தான்தெறித்துபோகும் தேசிகனேவாசியோகவழிகளெல்லாம், கூறுப்நீயிதுவாசி யோகமென்பார் குரியோட்டியின்னூலேப்பதனஞ்செய்யே. (சுூ௰௫)

செய்துபார்யின்னூலேசெவ்வையாகச் செப்புமிந்ததிறவுகோல்சூட்சந்தன்னைக், கொய்துபார்பற்பலவாய்ப்போகொட்டாமற் குழந்தாய் நீகேட்டதினுல் கூறுவேன்யான், உய்துபார்வாய்வதுதான்மனமாய்ப் போச்சு வுத்தமனேயம்மனந்தானகாரமாச்சு, எய்துபார்த்துண்டாக் காலாதிகற்பம் என்மகனேவாய்வதினுல்வகாரமாச்சே. (சுூ௰௬)

ஆச்சுதப்பாவாய்வானமனதைமெள்ள வழிமாறிப்போகாமல் வசமாக்கிக்கொள், ஏச்சுதப்பாயிச்சையிலே மனம்போனுக்கா லென்ன சொல்வேன் சுழல்காற்றிலகப்பட்டாப்போல், போச்சுதப்பாதுரும்பாகிசுழலுங்கண்டாய்போனமனம்சுழண்டாக்கால் பொருந்துமோசொல், பேச்சுதப்பாநூல்களெல்லாமிந்தவார்த்தை பேய்மக்காள்மூச்சிழுத்து ரேசிப்பாரே. (சுூ௰௭)

ரோசிப்பாரோசகந்தானென்றுசொல்லி ரெந்தனுடநூல்பாராதோ ஷத்தாலே, வாசிப்பார்நூல்பேசும்வழியைக்காணார் வந்தபடிபேசியல் லோ வழக்குசெய்வார், பூசிப்பார்ஜகக்கியானியின்னூல்தன்னை புவி திரிந்துபோகாதேபுகழ்வேன்கண்டாய், நேசிப்பார்தவசிகளெந்தனூலை நேர்வாகயான்சொல்லும்வாசிகேளே. (௯௱௰௮)

வாசிப்பாரிதுவாசிரோசிப்பாய்கேள்வண்டபிண்டசர்வத்தில் நிறை ந்துநீயும், ரோசிப்பாய்ஓங்காரத்துள்ளேநின்று ரெவ்வுயிரில்நிறைந்தத ப்பாகண்டுவாங்கு, காசியப்பாயென்றுசொல்லிப்போய்விடாதே கங்கை தீர்த்தஸ்தானமென்றசங்கைவேண்டாம், யோசிப்பாய்மூச்சிழுக்கச் சொல்லவில்லை ஓமைந்தாயுந்தனுக்கே யுரைத்தேன்தானே. (௯௱௰௯)

உரைத்தேனப்பாஅகாரத்தின்விவரமெல்லாம் உள்ளபடிசொன் னேனப்பாகண்டுகொள்ளு, மறைத்தப்பாவுந்தனுக்குச்சொல்லவில்லை மார்க்கமிதுமயங்காதே மர்மஞ்சொன்னேன், குறைத்தப்பாயின்னூல் தான்சொல்லாதப்பாகுருபுத்திராளின்னூலைச்சரணஞ்செய்வார் நிறை த்தப்பாயான்சொல்வேன்கேளுகேளு நிடரில்லைநிராமபந்தானுகாரங் கேளே. (௯௨௰)

கேளேதானுகாரத்தின்வாறெல்லாம்நீ கேசரம்போற்சொல்லுமிந் ததிறவுகோல்தான், பாளேதான்பிராந்திநீக்கச்சொல்லுமப்பா பஞ்சி லிட்டத்திபோலப்பகருமின்னூல்,கோளேதான்சொல்லாதுயின்னூல் தன்னில் கோஷ்டமினிச்செய்யார்களின்னூல்பார்த்தோர், மேலுநீ தான்மெய்ஞ்ஞானியாகிப்போவாய் மேதினியில்பந்தமதில் சிக்காய் காணே. (௯௨௧)

காணேதானுகாரமதைசொல்லிவாரோன் கண்மணியேவிண்ணுச் சுகருநெல்லியாச்சு, ஊணேதான்ஓங்காரமாகிப்போச்சு உமைக்கூட்ட யட்சரந்தான்வுருதியாச்சு, தேனேதான்தெய்வமணிமாடமாச்சு தேங் கொளிதான்கயிலாயமாகிப்போச்சு, நானேதானுந்தனுக்குச்சொன்னே னப்பா நாட்டிப்பார்வைகுண்ட நிசவீடாச்சே. (௯௨௨)

வீட்டுக்குள்விளக்கொளியாகிப்போச்சு விதுசிகரசத்திபலேர்க மாகிப்போச்சு, ஏட்டுக்குள்பாட்டிருந்தால்காணப்போமோ யேகநிரா மயமானசொரூபந்தன்னை,நாட்டுக்குள்நாயோட்டுமெந்திரமிதாச்சு நானு னக்காய்ச்சொன்னேனப்பாநடந்துபாரு, கோட்டிக்குள்ஒருவனல்லோ அறிவானித்தை கோடிசித்துசணத்துக்குள் ஆடுவானே. (௯௨௩)

ஆடிப்பார்அகாரமதை யுகாரத்தில்நாட்டி அரகராஅகாரஉகாரா ரெண்டுஞ்சேர்ந்தால், பாடிப்பார்நிராமயந்தானென்றுசொல்லி பளிங் கேழாம்பூமியின்மேல்நின்றுதப்பா. ஓடிப்பார்சொரூபவெளிக்குள்ளே

நன்ருய் ஒன்றுகேள்நாதமங்கே கேழ்க்கும்கேழ்க்கும், கூடிப்பார்குரு புத்திராஸ்சேரச்சொன்னேன் குருக்குவழிநேர்யிதுதான்கூடுநன்றே.()

யாக்கோபுவினவல்.

நன்றென்றீர்என்குருவேபூகானந்தமூர்த்தி நாதாந்தவுகாரமது க்கிவ்வளவுஞ்சொன்னீர், கன்றென்றீர்கருநெல்லிவுகாரமென்றீர் கண க்காகசொல்லுமையா விண்ணென்றீர்முன். ஒன்றென்றீர்ஓங்காரசத் தமென்றீர் உகாரகயிலாயமான வகையைச்சொல்வீர், சென்றென் றீர்யான்சேர சொல்வீரையா செவ்வையாய்ஒவ்வொன்றின் சேதி சொல்லே. (கூஉடு)

பூகானந்தர்கூறல்.

சொல்லுநீதானென்றுகேட்டபிள்ளாய்கேளு சொற்பமல்லஉகா ரமதுகற்பமல்லோ, மெல்லவேநோக்கிப்பார் உண்மைதோன்றும்மே ன்மை ருத்திரசிரசதனால்விண்ணதாச்சு, வெல்லேதான்கைலாயங் கொளுவாய்ப்போச்சு வேதாந்தஞ்சொல்லிவிட்டேன் உன்கண் மை யம், நில்லுநீதான்மையவுமைருட்டஸ்தனச்சு, நிரம்நீலம்திலர்தமப்பா கருநெல்லிசேரோ. (கூஉசு)

சேர்நெல்லிசோலையாய் நிலைத்துப்பார்நீ செப்பியதோர்சத்திய லோகமவைகுண்டக்காணும், பார்நெல்லிசோலைபோய் பஞ்சவர்ணம் பாங்கான்பூரகந்தான் அதிலேசெய்வாய், வேர்நெல்லிசோலைபோய்த்தே டவேண்டாம் வெளிவிட்டேன் உகாரஅகார உளவையெல்லாம், ஆர் நெல்லிசோலைபோய்நிலைக்கப்போருர் அரகராஅறிவுள்ளா யறிந்துநா டே. (கூஉஎ)

நாடறிந்துசோலையிலேநாட்டிப்பார்ப்போர் நற்குறியுனக்குரைத் தேன்நாதத்துள்ளே, வீடறிந்துவிளையாடுவுனக்குச்சொன்னேன் வி தைபுருவமையமென்றேவிள்ளும்நூற்கள், ஆடறிந்துஜோதிகலையாம ல்நின்று அந்தந்தசெயலறிந்து ஆடிப்பார்அங், கூடறிந்துகூடிடுதான் கம்பத்தாட்டம்குறிமையம் பூரஞ்சேர்த்துண்டால்தானே. (கூஉஅ)

சேர்த்துண்டால்பூரகந்தான் செப்பிப்போட்டேன் சேமெம்மை யண்டியதால்செம்மையாய்த்தான், கோர்த்துண்டல்எவ்வாறோ யெ ன்றுகேழ்ப்பாய் குறையாமல்நிரையாய்த்தான் கூறிப்போட்டேன், பார்த்துண்டல்வேணுமென்ருல்சொல்லிவைத்தேன் பத்தொன்பதாம் அதிகபாட்டுக்குள்ளே, ஆர்த்தொண்டல்செய்தங்கே பார்க்கப்போரு ர்அதிதமயமுப்பத்திரண்டிலறிபிள்ளாயே. (கூஉகூ)

அரிபிள்ளாய்ப்பரிபாஷைசொல்லவில்லை அந்தந்தநூல்களிலேம றைத்துச்சொன்னார், தெரிபிள்ளாய்விரிவாகசொன்னேனின்னூல் தே க்கொளியைத்தட்டிவிடு தேஜோனந்தம். வெரிபிள்ளாய்வெட்டவெ ளியாகச்சொன்னேன் வேகவென்ருல்வேறில்லைபாருபாரு, குரிபிள்

ளாய்ஙேரிபிள்ளாயன்புள்ளாய்நீ கும்பகங்கொள்கொலுதாண்டு பதிய தாமே. (சூ௩௰)

பதியதுவேபார்த்தோர்க்கு அங்கொன்றில்லேபார்ப்பவர்க்கோரு ரவோர்பெற்றாரில்லே, விதியதுவேயதிலொருவர்கண்டோரில்லே விம்ம ட்டம்மட்டென்று சொல்லப்போமோ,கெதியதுவேயதுவரையான்சென்றுபார்த்தேன் கேள்பிள்ளாய்ககனசராசரமதண்டம், மதியதுவேய டங்கலுந்தானதில்யிசகியம்மகாபெத்தம்துவிதநியம்பரிசுத்தந்தானே.

பரிசுத்தமானவிடங் காட்டிவிட்டேனுண்மை பாருலகெலாமனித்தியமது நித்தியமப்பா, இருசுத்தமானவனேகொலுதாண்டிமேல்நீ யிடமதுவேபொருளதுவே யேகிநில்லங், நெரிசுத்தமானபிள்ளாயங் கிருநீமவுனம் நேர்நிராகார்சோதிமேபச்சங்கில்லே. குரிசுத்தமானசுகம் நீசொக்கிதுங்கங் குவித்துநீயங்கேநில்லு கும்பந்தானே. (சூ௩௨)

யாக்கோபு வினவல்.

தானமது தனிக்கும்பமெனக்குறைத்தீர் தங்குமிடமதுவெனவே தனிமையானேன், மோனமதுயெனையங்கே யிருக்கச்சொன்னீர் மொழியிலெமைகலக்கவைத்தீரொத்துக்கொண்டேன், தேனமுதுகலந்துண்டவின்பம்போலோர் தேவரீரிடம்பொருளேவல்சொன்னீர், சோனமதுள்மேல்நோக்கி பார்த்திட்டேனுண்மை கோர்த்தகுறிகலேடாமலுமைபோற்றுவேனே. (சூ௩௩)

போற்றியுமைப்பொற்பூவாலர்ச்சித்தேன்யான்பொன்னுலகங்கண்ணுலேகண்டபோதே, ஆற்றிநீரென்மனதைப்பொன்போலேயா அடுக்காறுங்கண்டப்பால் நின்றேன்யானும், யேற்றிநீரொருதீபமெங்கும் சோதி யெங்கும்யேகோபமதாயிருந்திட்டேன்யான், மூற்றியேமும் மூலமெனக்குச்சொன்னீர் முதற்பாதமென்குருவேயதுமெய்வாழ்வே.

பூதானந்தர்கூறல்.

அதுவாய்நீயதுவாகவங்கேநிர்ப்பாய் அவ்வருளேயுன்வாக்குவழியேயொக்கும், பொதுவாயுன்தனிவாககுபொய்யாதப்பாபோற்றும்புவிபொற்சிலம்பாலகவேநில்லு, மெதுவாய்வந்துனேயழைப்பார்நீபோகாதே மெல்லெனவேதேடிவந்துனேபணிந்துநின்று,யெதுவாயவந்துனே கேட்டாலதுவைவசேவி யென்மகனேஜனங்களுன்னேவணப்பிப்பாரோ. ()

வணப்புவார் வகண்டமதாய் கண்டபிள்ளாய் வண்டமதுகண்டங்கேவழிவேறில்லே, தினமங்கேசேர்வையாயிருநான்சொன்னேன் திங்களறவிபுரணம்போலெககும்பாரு, ஜெனமிங்கேவந்துன்னேபணிகுவார்கள் சேர்வையதுபார்வையதாய சேவித்தங்கில், மனமங்கேவத திடுநீமற்றொன்றில்லே மண்ணுலகில்முனியாவாய நினேததாமே. ()

ஆம்பினைத்தவாறெல்லாமதினாலாகும் அஸ்வருளின்விளையாட்டையறியப்போமோ, போம்பினைக்கேவாறெல்லாம் மனந்தானப்பா போகவிட்டால்பொருள் கிட்டாற்பொருந்தினில்லா, நாம்பினைத்தவாறெல்லாம்நம் மாலில்லைநானுனக்காய்சொன்னேனப்பா னன்பனென்று, ஓம்பினைத்தவாறெல்லாஞ்சித்திசொன்னேன் ஓங் ஓங் ஓங் வுண்மையாய்நமபினோர்க்கே. (௬௩௭)

நோக்கதிலேநுட்பமதாய் சொல்லிப்போட்டேன் நோங்காரத்தினுளவையுமுடைத்துப்போட்டேன், தாக்கதிலேகனிக்கும்விடம் சொல்லிப்போட்டேன் சரபுருஷரிலையதுவேதயங்சாதேநில், போக்கதிலேமனதையனுதினமுமப்பா பொன்போலேயுன்மனதை யதனாலாக்கு, ஆக்கதிலேயுன்மனதையலையொட்டாமல் அங் அங் அதனால ஜெயம் ஜெயமதாமே. (௬௩௮)

ஜெபமாகும்பூரணத்தின்மகிமையாலேசெய்காரியங்களெல்லாஞ்சித்தியாகும், லயமாக்குவுன்மனதையதனாலாக்கு லரிக்குமுதலெழுத்தெனவேயறிந்துகொண்டு, வயமாகும்யகாரத்துள்சென்றுநன்றாய் வளவிட்டுசொல்லவொண்ணுவரணன்சோதி, சுயமாகும்சுயப்ரகாச அரூபாரூபம் சுளுவாயான் அங் உனக்காய்வெளியிட்டேனே. (௬௩௯)

விட்டேன்யான்மாணுக்காயுனக்காய்சொல்ல விதில்சூதுயில்லையப்பா விவேகத்தோனே, பட்டேயான்விட்டபோ தகண்டாப்போலே பாரில்சித்தர்பரிபாஷையாகச்சொன்னார், தொட்டேயான்காட்டிவிட்டதுபோல்சொன்னேன் துலங்குநவரத்தினம் வொளிதீபம்போல்தான், முட்டியோன்யினியுனக்காய் சொல்வேனப்பா மும்மூர்த்திகள்அரூபன் சொரூபன்தானே. (௬௪௰)

சொரூபத்தின்வரலாறுகேள்மாணுக்கா சொல்லாதுயென்னூல்போலெந்தநூலும், இருபத்தின்மார்க்கமதாயின்னூல்போலஇன்னூற்குள் சர்வநூலயிக்கியமப்பா, குருபதத்தின்வழிநமபி வந்தோர்கெல்லாம் குறிகாட்டியிடம்பொருளுமே ஸ்தந்தன், அருபத்தின்சொரூபமதையடியார்காண அக்கணணுந்தந்தேனப்பாயதனாலகாணே (௬௪௧)

காணப்பாநான்சொன்னமார்க்கந்தன்னைக் கழறுதேகருமிகட்குயிந்தசூட்சம், வேணபடிப்பொய்பேசும்வீணரோடு வீணிலேதிரியாதேயாக்கோபென்று, தோணவேசொன்னாரோபூதானந்தர் தோய்ந்தபொருளியாவற்றும்பால்போலாக, ஊணிப்பாரொன்சீஷாஆசான்பூதர் ஊர்தனிலேயவரைப்போலார்தான்காணே. (௬௪௨)

யாக்கோபுசீஷனுக்குரைத்தல்.

ஆருமில்லைவடபாகமலையிலேதான் அங் கிருக்கும் வேளையிலே நூலைச்செய்தேன், கோரினேன்குருபாதந்தொண்டுபண்ணி குவலயத்தில்வாதத்தின்திறவுகோலுங், கூறினேன்தனியாகவெழுநாலுங்

குறியாகச்சிவயோகம்நூறுஞ்சொன்னேன், காரியமாய்க்குளிகைமுன் னூறுஞ்சொன்னேன் காட்டாகேகாயகற்பப்பத்துதானே. (சூ௬௩)

பத்தானவிழலைமுப்பதுவருஞ்சொன்னேன் பாலகனேவையா யிரமுஞ்சொன்னேன், சித்தானவைநூற்றுக்கோலுசித்து, செயநீரிலொரு தற்குமந்தரீகம்; முத்தான வைநூற்பாடிப்போட்டேன் முன்னே னே க்காணுதற்குஞானமநூறு, எத்தாப்பூாடிவிட்டேன் தூம்பரம்நூறு எடுத்துரைத்தேன்மைபோக்கு வைன்னூறுமே. (சூ௬௪)

ஆமடாயென்னைப்போலார்தான்சொல்வார் அரகராவுளவையெல் லாமெடுத்துரைத்தேன், தாமடாவகத்தீசரெந்தனுசான் தடையற வேயுளவையெல்லாமெனக்குச்சொன்னார்; நாமடாவவர்வுளவுக்கைபா கங்களை நாட்டினேனின்னூல்லிமேத்தவுண்டு. ஆமடாபூகருடவாக்கு ஞ்சொன்னேன் அன்பாகக்கார்த்திடுவாய் நூலைத்தானே. (சூ௬௫)

தாம்பிர வேதை.

நூலான நூலதனைப்பதனம்பண்ணு நுணுக்கமதாய்ச் சொல்லுகி றேனின்னங்கேளு, பாலானதாம்பிரமாம்வேதையப்பா பகருகிறேன் கருங்கையான்கானுமத்தன்.சேலானகருவுள்ளிமூன்றூடொக்க சே ர்த்தரைத்துச்செம்புக்கு கவசஞ்செய்து, மாலாகப்பத்தெருவிற்புடந் தான்போடு மகத்தானசெம்பதுவுமூறல்போமே. (சூ௬௬)

போனபின்புமூசையிலேவைத்துருக்கிபோக்கோடேகண்விட்டு ஆடும்போது, மானமுள்ளயென்சீஷாகருங்கையானின் மத்தானசா றதனைப்பிழிந்துபாரு தேனமுகமபத்தரைபாம்தங்கமாச்சு சேரடா முப்பதுக்குலன்றுதங்கம், வானவருஞ்சித்தர்களும் வாழ்த்துவார்பார் வையகத்திலுனைப்போலவார்தான்பாரே. (சூ௬௭)

துருசுகுரு.

பாரடாதுருசினிடபோக்குசொல்வேன் பதராதேதுருசதுவேப லமதாகும், நேரடாஜெயநீாலரைத்துமைபோல் நேர்மையுடன்பி ல்லைசெய்துராவிழில்வைத்து, கோரடாசிவகரந்தைவண்டுமூலி கோர் த்தரைத்துபில்லைக்குகவசஞ்செய்து, பாரடாபத்தெருவிற் புடந்தான் போடு பாலகனேயென்னசொல்வேன் சுன்னமாச்சே. (சூ௬௮)

சுன்னத்தின்காரமதை யென்னசொல்வேன் சூக்குமந்தானிவ் வேதைசிடிகைவேதை, பின்னமதுவாராதுயிந்தபாகம் பிழைப்பதற் கு மதிமேலேபத்துக்கொன்று சொன்னபடிகுருவதனைப்பாய்ச்சிடாய்நீ தொல்லைப்றும்வபதுபதினைறதாகும், என்னமோசொன்னேனென்றெ ண்ணவேண்டாம் யென்னுசானகத்தீசர்சொன்னவாக்கே. (சூ௬௯)

வாக்கான அவர்வாக்குபொய்யாதப்பா வையகத்திலவர்போலவுண் டோசித்து, போக்குதனைவிள்ளாதேகருமிகட்கு புத்தியுள்ளாய்ப்பூசி

த்துப்பதனம்பண்ணு, நாக்கமலத்தாயாரினருளையுன்னி நடத்தடா யான்சொல்லும் வேதையெல்லாம், தாக்குவேனின்னமுண்டு சிடிகை வேதை தயங்காதேசொல்லுகிறே னன்றாய்க்கேளே. (௬௰)

இரசச்செந்தூரம்

நன்றானபிரசத்தின்செந்தூரங்கேள் நாயகனேரசமதுவே பலந்தான்கொண்டு, குன்றானகுன்றுகனிவிருக்குமூலி குணமுள்ளாய்த் தேர்பூண்டுவளைத்துநன்றாய். பண்ணுகிறேன்ரசமதனையுட்பொதிந்து பட்சமுடனெழுசீலைவலுவாய்ச்செய்து, மன்னயமாய்க்கெசபுடந்தான் வைத்துப்பின்பு வளிலுவேன்புடமாறிபெடுத்துபாரே. (௬௰௧)

எடுத்துபார்ரசங்கட்டிசெந்தூரிக்கும் யேகாந்தகரிசனமேமசிகப் புமெத்த, கொடுத்திட்டேன்மூலயுடபரீட்சைகேளு சொல்லுகிறேன் தேள்மீதில்சார்பிழிந்தால், மடிந்துபோம்தேளதுவுமூலியாலே மாட்டுகிறேனரவத்தின்முன்னேநின்றால் கடிந்துமேபோகாதுதடையாய் நிற்கும் கண்மணியேயதையெடுத்தா லேகுந்தானே. (௬௰௨)

எருமேபேர்சொல்லிவேர்பிடிங்கில் என்னசொல்வேன் மாரணமாங்கருமமாடும், வாகுடனேநாதாக்களருளினலேவைளாக்கிட்டேன்சாத்திரக்கின்மறைப்பையெல்லாம், சாகாதவரம்பெற்றேன் ஆசானலே தாரணியில்வாதவித்தைபோகவித்தை, போகாமல்சடலத்தைபிருத்திகொள்ளு ம புண்ணியனேயவ்வித்தைதான்கண்டேனே. (௬௰௩)

கண்டேனேஞானமுதல்மார்தரீகம் காரியமாய்வயித்தியத்தினுளவுங்கண்டேனே, சண்டமாருதம்போலபிறப்போர்தம்மை சாகாமல்பிழைப்பதற்குவுளவுங்கண்டேனே, எண்டிசையில்தானிருக்குமூலியெல்லாம் யென்குருவாமகத்தீசர்தயவாம்கண்டேன், விணடேனேயுந்தனுக்காய்விவரமெல்லாம் விருப்பமதாய்ச்சொல்லுகிறேன்னின்னங்கேளே. (௬௰௪)

சொல்லுகிறேன்செந்தூரம்பத்துக்கொன்று சொகுசாக மதிமேலேயீய்ந்துபாரு, வெல்லுவாய்வபததுவுமொன்பதாகும் வேகமடா செந்தூரபோகதுகண்டாய், நல்லவித்தையிவ்வேவதைகைவிடாதே நாடதனில்கிடைக்காதுயிந்தபோக்கு வல்லமையாயாடிப்பார் சொன்னதெல்லாம் வகையறியாமூடருக்குயெய்தாதென்னே. (௬௰௫)

வெள்ளிவித்தை-

எய்யாதுபின்னமொருமேபாக்குசொல்வேன் யெழிலானரசிதமதுவித்தைகேளு, பொய்யாதுகுருபரனர்சொன்னவாக்கு பூவுலகிலுங்களுக்காய் இயம்புவேன்பார், மெய்யாகத்தாமபரத்தை வருக்கிநீதான் மேன்மையுள்ளாய்வெட்பூண்டின்சாறில்தோய்த்து; கைதவமாய்யேழுவிசையுருக்கிச்சாய்க்க கண்மணியேதாம்பரந்தான் வெளுத்துபோமே.

வெள்ளக்கபற்பம்

போட்டாவதின்பிறகுசொல்லக்கேளு புகழாண்வயதுபதினாறதா
கும்- காமட்டாவங்கபற்பஞ் சொல்லக்கேளு தபவானகார்பூண்டை வ
ரைத்துநன்றாய்-வர்மட்டாவங்கத்துக்கவுஞ்செய்து வகையாகப்பின்செரு
வில்புடந்தான்போடு- காமட்டாயியம்பியதோர்வகைகந்தானும் நாயகனே
திருநீறாய்நீறிப்போமே ௬௱௭

நீறிப்போமபற்பமது பத்துக்கொன்று நீலையாகத்தாம்பரத்துக
கிய்ந்துபாரு- வீறியனேசெம்பதுதான்சுத்திபாச்சு வீணிலேபோக்கா
மல்காலுக்கொன்று- காரியமாய்த்தங்கமது சேர்த்துப்பாரு கண்மணி
யேவயதது வெயொன்பதாகும்- நாரியர்பால்போகாதே தர்மஞ்செய்து
நன்றாகசாத்திரத்தைதயாய்த்துபாரே ௬௱௮

பாரேசீவனத்தைசெய்துகொண்டு பண்பாகவெந்தனூலை
பாரு- சீரேநீயொருவருக்குங்காட்டாதய்யா சிற்பரனைக்கற்பனைத்தி
யானம்பண்ணு-ஊரேநீதிரியாதேயுற்றுப்பாரு ஓகோகோவம்பாளினெ
ட்டம்பாரு - காரேநீகண்மணியேபதியில்சொக்கு கருத்தாகநாதவிந்
தைக்கண்டிடாயே ௬௱௯

செம்புசுத்தி

கண்டிடர்பின்னமொருகருவைச்சொல்வேன் கமறாதசெம்பினு
டசுத்திகேளு - விண்டுபார்செம்பதனைவததகடதாக்கி விண்மணியே
உத்தாமணியிலேயரைத்து- சண்டமாருதம்போலநவசஞ்செய்துசாங்க
முடன்பத்தெருவில்புடந்தான்ரெண்டு- கண்டபடிபேணியிலேப்புடமி
ரண்டு காட்டாதேஊமச்சிப்புடமொன்றுச்சே ௬௱௰

புடமதுதான்தீர்த்தபின்பு குருசெம்பாச்சு புண்ணியனேதங்கம
துகாலுக்கொன்று- தட்டம்போலச்சேர்த்துப்பார்வயதேழாச்சு தாரணி
யிலிவ்வேதைவெகுசுருக்கு - வடமாயகசட்டருக்குகாட்டொணாது வா
காகச்சிவலைத்தைசெய்துகொண்டு- மடமானஸ்கம்பத்தைநோக்கிப்பா
ருமைந்தனேவாதமெல்லாம்சிக்குந்தானே ௬௱௰௧

தங்கபற்பம்

சிக்குந்தானின்னமொரு போக்குசொல்வேன் சேயேமையண்
டியதாலசெவ்வைவாக - ஒக்குந்தான்கவுதுபமைந்துண்டிமேல் ஓகோ
கோவண்றத்துநன்றாய்தங்கத்திற்கு- புக்கியகவசித்துப்புடமேயொன்
றாட்டுடியெடுதிருநீறாய்நீறிப்போமே - தக்கபடிசொன்னேனேயுந்
தனுக்காய் தயவகாதேவசீகரத்தின்வுள்ளவைக்கேளே ௬௱௰௨

## வசியம்

உளவான்வசியமடா யென்னசொல்வேன் உற்றுப்பார்நான்கூறும்வகைகளைநன்றாய்- தளவான ஆறுமாதக்கற்பிணித்தான் தாரணியில்மாண்டபின்புமயானம்போவாள்- களவாக அவள்சாம்பல்எலும்புவாங்கிகழன்றுதேபனிநீராலரைத்துபில்லே - உளவாகத்திட்டிநீகாயவைத்து உத்தமனேயத்தெருவில்புடந்தான்போடே ௯௯௩

போட்டெடுத்துவில்வத்திப்பலகைமீது யோக்கமுடன்தான்பரப்பியைக்கோணமிட்டு - காட்டிகமாய்உச்சியிலேயகாரம்போடு தயங்காதேதமறுவரையிலநகாரமபோடு- பூட்டடாமறுவரையில்மகாரம்போடு புண்ணியனேயதன்பிறகுசிகாரம்போடு - நாட்டடாவதற்கப்பால்வகாரம்போடு நாயகனேபிரணவமாமத்திபோடே ௯௯௪

மத்தியாம்அரைகோறுஞ்சூலம்போடு மைந்தனே ஓம் யநமசிவ வசியவசிய- பத்தியாய்மந்திரத்தைதியானம்பண்ணு பாவதுபெறலட்சமுருதன்னைப்போடு - சித்தியாம்செகமேழும்வசமேயாகும் செய்கின்றதொழிலெல்லாம்ாடுமாடும்- எத்திசைநீபோனாலும் பணிகுவார்கள் யென்மகனேகசடருக்குகாட்டொணாதே ௯௯௫

மகனேகேள்விபூதிதனைமேருக்கேற்ற மன்மதன்போல்நீஜொலிப்பாய்வையந்தன்னில்- தகமைபெறமடவார்களுனைக்கண்டாக்கால்தளருவார்அதிமோகசையோகத்தால்- வகையானமானிடர்க்குவியாதிகண்டால் வளமானவிபூதிதனையவர்கட்கிப்க்கால் - சகந்தனிலேகோயேதுபில்லியேது சார்ந்துவருஞ்சூனியங்களெல்லாம்போமே ௯௯௬

## ஸ்திரீவசியம்

போமேதானின்னமொருகருவைக்கேளு புகலாகேருத்திராஜமையேறுக்கப்பா- தாமேதான் ஆதித்தவாரந்தன்னில சார்பாகக்காப்பாடியெடுத்துவந்து- நாமேதான்சொன்னபடிபூசமப்பா நலமானநட்சத்திரகாலிலேநீ- காமேதான்வாயதனிலடக்கிக்கொண்டு கண்மணியேசாமமதுரெண்டுதானே ௯௯௭

சாமமதுரெண்டான வேளைதன்னில் தையலர்களிடமேகொதிகூத- கேமத்திலிடம்பேர்ந்துவருவாளப்பா நீலேப்பிசகிப்போகாதே நீணிலத்தில்- காமமதுபெருகியுன்னண்டைவந்து கட்டிமுத்தந்தந்திடுவாள்கன்னியப்பா- கோமானேமாய்கையதிலசிக்காதையா குணமானயாக்கோபுகூறினேனே ௯௯௮

செம்புசுத்தி,

குணமாகச்சொல்லுகிறேன்வாதவித்தை குவலயத்தில்சொல்லா
தயென்னூல்போல மணமானநூலப்பாயெந்தனூலு மார்க்கமெலாந்
தோயுமடாயிந்நூலில் - சணமானவேதையடாசெம்புசுத்தி தாரணி
யில்செம்பதனைத்தநடதாக்கி - கணப்பொழுதில்நீயெகி சுருட்டிமூஷி
கண்மணியேபெகொண்டுவந்துசொல்லக்கேளே ௯௬௯

கேளேதானறைக்குநன்றாய்செம்புகசப்பா கெடியாகக்கவசித்து
மாளுக்கார்-நாளேசான்போககாமல்யெருவோபத்தில்நாயடேபுடம்
போட ஊறல்போச்சு- காலேதான்பத்தரைமாற்றுகம ச்சு மாட்ட தே
சிவனத்தைசெய்துகொண்டு - வாளேதன்நான்சொன்ன சித்துவெல்
லாம வையகத்திலாடிப்பார்அருமைதானே ௯௭௰

வெள்வங்கம்சீரெடுக்க

அருமையாய்வெள்வங்கசீர்தானேக வப்பனேகாடியிலேக்கொண்
டுவந்து- பொருமையாய்வங்கத்தைத்தானுருக்கி போக்கேநாமேடூர்ப்பி
றிக்கால்சீர்தானேகும் - தருமமதுநடாத்தியப்பா தாரணிதன்னில் தம
பனைத்தியானித்துசொக்கிதூக்கு - கருமத்தில்சிக்காதேவேதைப்பா
ர்த்து காரியமாயக்கண்மணியேவின்னேப்போற்றே ௯௭௧

போற்றடாபிரமத்தின் தியானம்பாரு பொன்னுலகவதிசயமோ
வென்னசொல்வேன்- நாற்றிசையில்நாதாந்தசித்தசெல்வர்கள நமனுரை
த்தான்விலக்கிகொலுவில்நின்றார் - காற்றடாவாசியைத்தானேறக்கிப்பா
ருகருவிளமேகொட்டாவிசுழிமைப்பாரு - சாற்றடாசிறுவாசல்தன்னை
நோக்கி தற்பரனூர்பதியேகும்பாதைதானே ௯௭௨

பதிபானதம்பத்தைக்கண்டுதேறு பாகுபெறசுழிசிலையில்யோ
ட்டிப்பாரு- கதியானஉள்நாவுஅண்ணுவில்தாக்கு கற்பகமேடச்சியெ
ன்றபதியைக்காணு - சதியானநமனூரின்பதியைத்தாண்டி சாதகமாய்
நாட்குநாள்பழக்கம்பண்ணு- உதிக்குமேபஞ்சவர்ணக் கூத்துகாணும்
ஓர்மனதாயசீயிருந்துசொக்கிப்பாரே ௯௭௩

பாரேநீதசதீட்சை யொன்றுப்பக்காணும் பாநலமில்பஞ்சகர்த்தா
ளாட்டமாட்டம்- சீரேதான்வழிபிசகாவண்ணம்பாரு சிற்பரனுமன்
தாசானகதீசர்பாதம்- காரேநீகொண்டுபண்ணியியவைபாரு கண்ம
ணியேகாட்டுவார்கலங்காதேநீ- ஊரேதான்திரிந்தலைந்துபோகாதப்பா
உற்றபொருளியாவத்துஞ்சொல்வார்போற்றே ௯௭௪

### வசியயந்திரம்

சொல்லுவார்கண்மணியே யின்னமொன்று சொகுசாகச்சொல்லுகிறேன்வசியயந்திரம் - வெல்லுவாய் ஆறுவரைநேரேகீறி வேகமுடன் ஆறுவரைகுறுக்கேகீறி- வல்லமையாய் யநமசிவவென்றுமாட்டு வகையாகசிவயநமவென்றுபோடு - அலலலநமசிவயவென்றலுணு அடைவாகவயநமசிவென்றுசார்ற்றே ௬௭௫

### மோகனயந்திரம்

என்றுமே-மசிவயந-வெழுத்தைசயூணு ஏகாந்தவசியமடாயிவ்வெழுத்து - ஒன்றுமேயொளிக்காதுசொன்னேனப்பா ஒளிவானமேலேவமாரெழுத்தைக்கேளு- குன்றுபோல்முன்சொன்னபடியேகீறிகுணமானவனைகோணஞ்சூலம்போட்டு - கன்றேகேள்-மசிவபந-வென்றுபோட்டு கலங்காதேமுன்சொன்னபோக்குதானே ௬௭௬

போக்கானவெழுத்ததனைத் தலைகீழாக போட்டார்முன்சொன்னவாறுபோல- தாக்கானவரைதோறுமெழுத்தைமாறு தளராதேயக்கரத்தைப்பிசகிடாதே - நாக்கமலததாயாரினருளினாலே நாட்டினேன்மோகனத்தின்மார்க்கமப்பா- நோக்கிப்பார்மோகனம்போலுண்டோசித்து நொடிதானதம்பனத்தின்வாறுகேளே ௬௭௭

### தம்பனயந்திரம்

கேளேதான்தம்பனத்தின்மார்க்கமையா கெணிதமுடன்முன்சொன்னசைகைபோல- பாளேநமசிவயவென்றுகாக்கு பாலகனேதலைகீழாயசைகடோறும் நாளேதான்யோக்காதுஎழுத்தைமாறு நாயகனேதம்பனம்போலுண்டோவாட்டம்-காளேகீகழறுதேயொருவருக்குகருத்தாகப்பேதனந்தான்கூறக்கேளே ௬௭௮

### பேதனயந்திரம்,

கூறுவேன்-வநசியம-வென்றுதாக்கு கூட்டடாமுன்போல வெழுத்தையெல்லாம் - வீரியமேபிசகாதுபேதனந்தான் விண்மணியேவிள்ளாதேபேதனததை- மீறியேபோகாதேயாசான்போல மீட்சியுடன்கீலேபோதேகிப்பாரு- மாறுவாய் ஆகருஷணவெழுத்தைக்கேளுமகத்தானவென்சீஷாசெப்புவேனே ௬௭௯

### ஆக்ருஷணயந்திரம்

செப்புவேன்-சியமவந-வென்றுபோடு சேயேகேமுன்போலமாறுமாறுந் தப்பில்லைபான்சொன்னமாறலையா சாருதமுடனே ஆக்ருஷணஞ்

சொல்லொணாது- ஒப்பமுடன்யெனைப்போலயார்தான்சொல்வார்ஒளி
வுள்ளாய்ஆகருஷணமேபோலேயுண்டோ- இப்புவியில்வித்துவேஷண
மெழுதவையப்பா வின்வேலையுனக்காகயின்னங்கேளே ௯௮௰

வித்துவேஷணயந்திரம்

இன்னங்கேள்-மயநவசி-யென்றுவூணு இகபரத்திலடுகின்றசித்
துவப்பா- நன்னயமாயமுன்சொன்னவாறுபோல நாட்டாவரைதோ
றுமெழுத்தைநமாறு- தன்னியனேவித்வேஷணமிதுதானப்பா தப்பா
துயான்சொன்னமார்க்கமடா-உன்னியேயெனைக்கேட்ட வப்பாபாரு
ஊர்தனிலேஉசசாடனமியம்புவேனே ௯௮௧

உச்சாடனயந்திரம்

இயம்புவேன்-வயநமசி-யென்றுமாட்டு யெழிலானவரைதோறு
மூன்போலாக- சயம்பெறவேபோட்டுவிடுவென்புள்ளாய்நீ சாற்பான
வுச்சாடனமிதுதானப்பா - நபமானவட்சரத்தின்மகிமைமெத்த நான்
கூறும்வகைபதுவேபொய்யாதப்பா- லயமாக்கியுன்மனதைத்தேற்றிக்
கொள்ளு லலாடத்தின்விதியதனையழித்துப்போடே ௯௮௨

மாரணயந்திரம்,

அழித்துமேயாயுனைநீவளர்த்திக்கொண்டுவாத்தாளின்பாதமதை
த்தினமும்போற்று - வழுத்துகிறேன்மாரணமாங்கருமமப்பா வகை
யான-சிவயநம-வென்றுபோடு- பழிப்பானவித்தையடா யிந்தவித்தை
பாருலகில்வெகுசுறுக்குச்செய்யாதே - அழிந்துமேபோகாதேஆக்கி
ன்யாதம் அப்பனையர்ச்சிப்பாய்அன்பாய்த்தானே ௯௮௩

சொக்குத்தூள்

தானுனயின்னமொருபோக்குகேளு தயக்காதேமதிமயக்கிபூண்
டோடொக்க- காணுமயக்கிவேர்பஞ்சுவெட்டு கண்மணியேகலைப்பி
ண்டகக்கொடியிறேடு - வானுவகிழல்வணக்கிகொட்டால்வாடி வப்ப
னைபொடிசெய்து தியானமோகி- தேனுனயெனகுழந்தாய்மேரகனக்
தான் செபிப்பாயேவுனக்கிடியார்தான்காணே ௯௮௪

காணவேபொடியள்ளி மாதர்மேலே காட்டிவிடுயெள்ளளவுபொ
டியைத்தூவ- தோணவேயவர்களைவுமாறிப்பப்பா கொல்லுலகினவிழுந்
திருப்பாள்பொடியினாலே- மாணமருக்கல்லியள்ளாய சொல்லக்கேளு
மண்டலத்திலிதுகாண தொக்குதூளு- நாணவேமாதரைப்புலகவே
ண்டாம் நாயகியே பிசித்தமாதர்களைக்கொள்ளே ௯௮௫

## ஏமவித்தை

கொள்ளடாவில்லாதேயேமவித்தை கூறுவேன்வார்மூலிகொண்டுவந்து- உள்ளபடிமதியதனையுருக்கியப்பா வுத்தமனேகண்விட்டுஆடும்போது- நள்ளடாசார்பிழிந்துவிடுத்துப்பாரு நாணிலத்திலேயென்னசொல்வேன்பதந்தெத்தென்றுக - கள்ளமதுமில்லையடாயிருபத்தைந்தாம் கண்மணியேவேமத்தின்வயதுதானே ௬௮௬

## அயத்தங்கம்

தானான அயத்தங்கஞ்செப்பக்கேளு தயவுள்ளாயென்னசொல்வேன்மகிமைமெத்த- தேனான்யென்சேஷாவட்டப்பத்திரி தேவனென்றுகுறுமுனிதான்சொன்னவாக்கு- காணுகானகத்திலிருக்குமூலி கண்மணியேமதுரைக்குமேற்கையையா - கோணுமலைநாலுகுகைதானென்று கொற்றவனேயதிலேவசிப்பார் குமாரசித்தே ௬௮௭

சித்தானபகாசித்து குமாரதேவர் செருக்கின்றியம்மலையில்துவாபரத்தில்- பக்திசெய்யவந்தனராமின்னும்மட்டும் பாலகனேயிருக்கின்றார்நாட்டத்தோடு கத்தனைப்போல்ஜொலிக்கிறதேதேகமப்பா கற்பகம்போல்வளருகின்றதையாவாயுள், இத்தகையசித்திருக்குமலையிலேநேரம் இலங்குதேவட்டப்பத்திரிதான்காணே ௬௮௮

காணுமேயான்கூறு மூலியெல்லாம் காட்டுவார்குமாரசித்தைத்தொண்டுபண்ணால், தோணுவார்ப்பணிந்தவர்க்குகென்னாலுங்காண்பிசொல்லுவாரென்னாலில்மொழிந்தபாஷை- ஆணுவமாம்அயதகைசீகாய்ச்சியப்பா அடைவாகவட்டப்பத்திரிசாரில்தோய்க்க - நாணுமேயிரும்பதுதான்தங்கமாச்சு நாதாந்தயோகிகுசொன்னபோக்கே ௬௮௯

நாதாந்தசித்தருக்காமிந்தவித்தை நலமில்லாசமூசாரிகசெய்யாதப்பா- வேதாந்தரிஷிகட்குசொன்னவித்தை விண்ணுலகம்மண்ணுலகஞ்சொலிக்குமேமம்- வாதாடும்பதினெட்டுசித்தரப்பா வகையதனைக்காண்பிக்கப்பயந்தாரையா, மூகேவிசண்டாளக்கருமிமாண்பர் முன்னேனைத்தேடிநல்கிடைக்கும்பாரே ௬௯௰

பாரேதான்திரிந்தலைந்து வருதப்போது பாங்கானஇமயகிரிமேற்கேயையா- சீரேதான்வாரியரிஷியாசிரமந்தான் திசமூாலைமலையாறுகுகைகள்மூன்று, காரேதான்குகைக்குள்ளேதாமர்தானுவ கனிவாகவீற்றிருப்பார்கர்த்தாபோயில- சீதரேதான்வரைச்சுற்றிகாவலப்பா தேர்ச்சியுள்ளகாடிபுல்சிகைதானே ௬௯௧

சிக்கியுடன்செந்நாயுங் கருநாயுங்காண் ஜெகமதிற்றன்றுஞ்சாக் கோடாளிதானும், இகழ்தமாய்ப்புலியோடுகோவிதானும் இயலானதுநளிகுட்டிசாத்தியோடு- பொங்கமுடனமாடனிருளனோடு புகழானவீரபத்திரன்முனிகருப்பன், சகமையின்திகாவலப்பாவவரைச்சுறறிதயாபரனேயென் சொல்லிவன்மகிமைதானே ௬௬௨

தானெனவாமனைபமொண்போமென்றால் தாரணியில்பனிரண்டு வருடமப்பா, தேனுக யிபாஸமது செய்யவேண்டும் தேசத்தில்இவரருளதான்கிட்டுமப்பா, கோனெனவாமரிஷிதன்னைக்கான குறுமுனியெனஞானவேண்டிக்கொண்டேன், மானுனவெல்லிஷா போய்வாவென்று மகத்தானமூலிகைகளைக்காண்பித்தாரே ௬௬௩

மகத்தானமிருகத்தின்வணங்கிமூலி மாட்சியுடன் கைக்கொடுத்துமிருகதகின்முன், அகத்தியனார்சீடன்யாணியாக்கோவென்று அரையடாமிருகமெல்லாமோடிப்போகும்- சகத்திலேபூதகணமெல்லாமோடும் சார்ந்துநீவாமரிடிதன்னைக்கண்டு வகமகிழ்ந்துயெந்தனுட பெயரைச்சொல்லு வரிசையுடன்றானழைப்பார்வளமைதானே ௬௬௪

வளமையுடனழைப்பாரேயென்றென்றுசான் வாகாகச்சொல்லிவிட்டார்யாக்கோவென்று, இளமையடாயென்வயதுபதினறப்பா என்மகனேகுறுமுனிதானறைந்தாற்போல, களவின்றிசென்றேனேவாமரண்டை கருத்துவந்துயெனையழைத்தார்கருணையாக - உள்வாஸபேர்க்கெல்லாங்காண்பித்தார்பார் உத்தமனேஞானமொடுவாதந்தானே ()

வாதந்தான்முன்சொன்ன வயப்போக்கையா வளமையுடன்வட்டபத்திரிசிவப்பதாகும், நீசமூலமும்மலையிலிருக்குதையா நேர்மையுடன்கொண்டுவந்துசெப்பக்கேளு, சாதனமாயதகானறைத்து வயங்கனக்கு சாங்கமுடன்கவசித்துப்புடந்தானையா, தோதகமாய்ச்செஜபுடந்தான்போட்டுப்பிற்பு தோரமலனைநயெடுக்கதங்கந்தானே ௬௬௬

சங்கமதுசிவயோகிக்கெய்துாபாரு தாரணியில்மாந்தருக்கு எய்யாதப்பா, சங்கையின்றிசொல்லிவிட்டேனுந்தனுக்காய் சார்பானசிக்கெலலாமிதிலேமீதாயும, கங்கையெடுகிங்களணிசங்கரன்றான் காட்டினார்குருமுனிக்குஞானமெல்லாம், புகசித்திவெட்டுரிய குருமுனித்தான் புகட்டினேருலகிலுள்ளசித்துதானே ௬௬௭

சித்தானகருவிகரணங்களெல்லாம் செப்பினூர்குருமுனிதானைத் தனுககு, எத்திசையிலென்னூலுக்கெதிர் நூலுண்டு என்னுசான்முத ந்கொண்டுசித்தரெல்லாம், நத்தினூரென்னூலைவெகுவாயப்பா நாயக னேமறைப்பில்லையென்றுசொல்லி, முத்தானஞானமுதல் மாந்தரீகம் முன்னின்மவாதமொவைத்தியந்தானே ௬௯௮

தானானவறுபத்து நாலுசித்தும் சாற்றினேன்மறைவின்றிதிறவு கோற்போல் - தேனானகண்மணியேநூலையப்பா தேசத்தில்சருமிகட் குகாட்டாதையா, கோனானகுருவசனே வணங்கிசில்லு கோடிபொரு ளீய்ந்தாலும் நூல்கொடாதே, ஆனாலும்ஆகாகாயெழுனூர்போல அ றையவில்லையாககோபுகூறினேனே ௬௯௯

யாககோபுவாதத்தின்திறவுகோல்தான் யவனியிலேசொல்லிவை த்தேநனுக்காயப்பா, வாக்கதுவும்பொய்யாதுசெய்பாகங்கான் வரை ந்தேனேபூட்டிற்குசாவிபோல, நாக்கமலத்தாயாரினருளினாலே நவி ன்றேனேபக்கீர்யாக்கோபுதானும், நோக்கிப்பார்கண்ணாடி முகம்போ ற்காணும் நொடிக்குளளேயெழுநூறுமுற்றுமுற்றே எ௱

மூததானமூதறிவோர் வாழிவாழி மூப்பாமூக்கப்பாலேநின்றோர் வாழி-பத்தானவாசைதனையொழித்தோர்வாழி பதியறிந்துமதியறிந்து நின்றோர்வாழி- சித்தானதசதீட்சையறிந்தோர்வாழி சிவசிவாபூரணத் தில்கலந்தோர்வாழி - அத்தான்கர்த்தனைதான்றொழுதோர்வாழி அா காாயெழுநூறும்வாழியாமே எ௱௧

மகாமகத்துவம்பொருந்திய பக்கீர்இயாக்கோபு

சுவாமிகள் அருளிச்செய்த

வாதத்திறவுகோல் - எ௱

முற்றுப்பெற்றது,

-()-()-()-()-



உ

சிவமயம்.

இயாக்கோபு அருளிச்செய்த

# வாதத்திறவுகோல் சூத்திரம் - ௬௱.

கடல்சூழ்ந்தபுவனங்களசாசரமெங்குமா
கருணையோடமர்ந்ததேவைக்
கமலமலர்தேஜோமயாநந்தம்பொழியுமெழிற்
காலடியிணைத்தொழுதுயான்
மடல்பெரும்வைத்தியமைம்பதுஞ்சொல்லுவேன்
மானிடர்கள்கொண்டாடவே
மன்னுமுயர்பற்பமொடு செந்தூரசூரண
மகிழினியதிராவகங்கள்
தடமிகும்லேகியம் கிரதமொடுகளும்புகள்
தயவாகசொல்வதற்கு
தரணிதனையொருநொடியில் தவிழ்ந்துவிளையாடிய
தற்பரானந்தபொருளே
நடனமிடுமயிலேறி வருகின்றகுருநாத
நாராயணன்மருகனே
கடினமலர்பாதமதைநம்பியான் சொல்கின்ற
நன்மொழிக்காத்தருள்கவே. (௧)

எகுவதனைத்தகடாக்கி மூசிசாற்றில் யேழுதிரம்தோய்ந்தாட்டி
யிடிக்கத்தூளாம், பகருமுன்னிலைச்சாற்றிலரைத்தரைத்து பரும்புட
மாய்ப்போடச்செந்தூரமாகும்; அகிலமதில்நோயாளரன்புகொண்டு அ
றிந்தனுபானத்துடனேயீயக்குன்ம; மேகுமேபிணியகற்ற யெகுதூளா
க்கி விளங்கவைக்குமிந்திரியவிளைவுமாமே. (௨)

நல்லிரும்புநற்பொடியைக்காந்தத்தாலே நாட்டியெடுத்துளதனை
க்கல்வத்திட்டு, சொல்லியநன்முத்தியதோர்சமபுட்டை துவைக்க
விழும் சார்வார்த்துசாமம்மூன்று, மெல்லியநல்நவநீதமாகுமட்டும் வி
டாதரைத்து வுலர்த்தியதைவைத்துக்கொண்டு. சொல்லுமனுபானமு
டனீந்தால்பாண்டுதொந்தகுணமகண்டுடலும்சொர்ணமாமே. (௩)

தாம்பரபற்பம்.

சுத்திமிட்டதாம்பரத்தைத் தகடதாக்கி துணித்தபுளிபத்திரம்
போல்தாக்குநோய், குத்தமற்றகெந்தியைநீபொடியாய்ச்செய்து கூட்

டு

டிமங் * கிலாசல * முத்தன் * பான்சாறு, வத்தவத்தவெய்யல்தனிலிருநாளிட்டுவகுப்புடனேதுளசுருவிமேனிச்சாறு, நித்தம்நித்தம்வகைக்கொருநாளுறச்செய்து நிகட்டிப்பார்தாய்சிறந்தமெழுகுமாமே. (௪)

மெழுகதனையுலர்ந்தபின்பு பொடியதாக்கி முக்கடுகுஞ்சீரகமுமிந்துப்பைபந்தும், பொழுத்தனையிற் கழஞ்சிபற்பம் தேனிலுண்ண பொல்லாதநோய்களிதில், குன்மமெட்டும், பழுவுதனிற்பிறந்தமகா சூலேயாறும் டானுளியின்பனிபோலாமென்றுயீசன், மழுவெடுத்தாரிம்மருந்தினுண்மைக்காக வானவருமனமறியமகிழத்தானே. (௫)

ஆய்ந்தெடுத்தவறைப்பொடியைப் பழச்சாறிட்டு அரைத்துநன்ருய்வில்லேதட்டி ரவியில்வைத்து, காய்ந்தபின்புமுன்போலவரைத்து தட்டி காய்ந்தெடுத்துமறுபடியுமுன்போல்செய்து, மாய்ந்தபின்புகெந்தகத்தைசுத்தியாக்கி வளர்பிரண்டைக் காரைக்கொடிசாற்றில்வீரம், தோய்ந்திடவேரவியிலிட்டுவுலரவைத்து சூதத்தைப்பதுங்கிட்டு துய்யதாக்கே. (௬)

ஆக்கிவைத்ததாம்பரத்தைத் தகடாயச்செய்து ஆறிரண்டனாச்சதிரம் வில்லேசாற்றில்; போக்கதிலேதகடதனைக்குப்பிசெய்து பொடியாக்கிமூன்றிலொன்றுபாணக்கெந்தி, தாக்கிஅறைமுன்சாற்றால்தகட்டில்சேர்த்து தளராமல்புடம்போட்டுவாற்றிப்பின்பு, தூக்கிபின்தானதினையறைத்தறைத்து துலக்கமிடுமாகுமட்டும்புடத்தைப்போடே.

போட்டுவரில்புடத்திலுதிர்தாம்பரபச்சை புரவாட்டால்புகந்திடுமுன்சூதபற்பம், நாட்டொருநல்வீரமது கெந்தியாறு நாண்மூன்று தாம்பரபுற்பநாலுதானுங், கூட்டியிதைக்கல்வத்தில்பழமும்வன்னிகுமரியின் சாறதினுல்சாமமூன்று, ஆட்டிநன்ருய்மெழுகுபடவரைத்து வாங்கி ஆதவன்றன்னொளிபடவே தட்டிவையே. (௮)

தட்டிவைத்துதாலமதின்புரத்தின்மேலே தணற்பிறந்துவெந்து நீராகுமித்தை, கட்டிவைத்தனுபானவிதத்திலீய கடினமாங்குஷ்டங்களெட்டுந்தீரும், முட்டிவிடுசூலேகளுமுதிரவாய்வுமூவருண்டுபாண்டுகருங்குஷ்டரோகம், குட்டமறும்வாதபித்தமையத்தாலே கூடிவரும் வியாதிகளுங்குணமதாமே. (௯)

காந்தமதாலாய்ந்தவயம்பலமோபத்து கனிவானநிம்பதுவுநான்கு பத்து, சேந்திருக்கநாலாகக் கீறிவைத்துதினமொன்று தினமருந்தை தொலும்பைநீக்கி, மாந்தர்களுஞ்செய்தகுற்றத்தாலடாந்தமகாசத்திகுன்மமெட்டுங்கிரிகூட்டத்திற், பூந்தவரிமுனிந்தகதை போலேயாகும்புகலாதேயெவர்க்குமிதுபுதுமைதானே. (௰)

இலுப்பைநெய்யில்சாரத்தை பொடித்துதூவி இருபத்தோர்தரமுருக்கிசாய்த்தநாகம், வலித்ததிசைவேண்டியதுசட்டிதன்னில் வை

---

* கீலா-கசப்புகீலா. * முத்தம்கோரை. * பாணி- சூரியகாந்தி.
* உருவி நாயுருவி. * மேனி குப்பைமேனி.

த்துருக்கிகள்ளிதனிற் பழுத்துதிர்ந்த உலர்ந்தசருகாய்ந்தெடுத்து பொடியேசெய்து ஊட்டிவர்முச்சாமம் பற்பமாகும், நிலைபடவேசொண்டியுடசரகைசுட்ட நீரதிலேநீர்வார்த்து கரைத்துதேறே. (௰௧)

தேறினதோர்நீர்வார்த்து அரைத்தரைத்து திரட்டியிதைப்புடம் போடுகசடுநீங்கி, மீறியினிவெளுப்பாகுமட்டும்போட்டுமேன்மைபெற வனுபானத்துடனேயீய்ந்தால், கூறியிடுமேகங்களிருபத்தொன்றுங்குஷ்டங்கள்பதினெட்டுங் குன்மமெட்டுங், மாறியிடும்வாதங்களென்ற ரோகம் மாற்றிவைத்துவுடலொளிரும் வாலையாமே. (௰௨)

சுத்தமுள்ளதாம்பரத்தைத்தகடதாக்கி சூடனையும் பொடித்திட்டுநெர்ச்சிச்சாற்றில், பத்திரமாங்காய்த்தோயபிரண்டைச்சாற்றில் பதினொன்றே புளியறணைகிழங்குமோரில், சுத்தமறுங்காச்சிதோயதனை வெட்டி கூட்டுவதுங்கெந்தகமும் நாலத்தொன்று. வைத்தரைநல்பழச்சாறுதகடிற்சேர்த்துவாய்மூடி கனக்கவொருகசப்புடத்தைப்போடே

போட்டெடுக்கபற்பமாமுன்சாற்றாலேபுகட்டியரைபுடந்தோறும் கசடுநீங்கி,காட்டுமது நீலவர்ணமடங்கிற்றானல் கனகமென்றபற்பமிது வனுபானததில்,கூட்டியிடயீரேழுநாளாறெட்டு கூறுகின்றவியாதியெல்லாங்காரத்தாலே, கேட்டுயிடைகெந்தகமும் பலத்தையீய்ந்து கீர்த்திபெறவாழ்வளிக்கும் கிரியைதானே. (௰௪)

காரீயம்தாம்பரமும்நாகவங்கம் கசடறுத்து சமனுக்கிக்கனல்மேவிட்டு, மீறியதீபடவுருகிற் சிலையைத்தூவி பருங்கரண்டியிட்டதனை வறுத்துக்கிண்டி ,ஆறியபின்னெடுத்துகுழிக்கல்லில்விட்டு அருக்கன்பால் விட்டரைத்துப் புடமாறப்போட்டு, வேறினியுவச்சிராங்கிப்பால்விட்டாட்டிவிரைந்துபுடமூவேழு மிகவும்போடே. (௰௫)

போட்டெடுத்துகல்வத்திற் பொடியாய்ச்செய்து பொட்டிவெல்லத்தனுபானத்துடனேயீய, மூட்டியபின் தீவினைகள் முன்னேவந்து முடிக்குமே முன்னோர்கள்யெழுதிவைத்த, எட்டிலுரையஷ்டகுன்மவிதனம்நீங்கிஎளிதாகுமிம்மருந்தைப்பற்றியுண்ண, வோட்டிவைக்குந்திருவுளமே யென்றுயென்று வுறுதிபெறவினையகலு முண்மைதானே. ()

கல்லுப்புசேரானுஞ்சமனதாகக் கல்லுரலிலிடித்ததனைகலையத்துட்டி, சில்லிட்டுமூடியதைபுடத்தைப்போட்டு தீயாற்றிநீலகண்டயிலைச்சார்விட்டு, மெல்லியதாயரைத்துருட்டிக்காயவைத்து மென்று தின்னமாத்திரத்தில் சூலையாறும், சொல்லுகின்ற டஷ்-குன்மமெல்லாம்தீரும் சோதனையாய்வருந்தியுண்ண சுவஸ்தமாமே. (௰௭)

சுத்ததாம்பரத்தைநீதகடதாக்கி சொல்லுமுட்டைபரத்தியடாசுட்டசாம்பல், மத்திக்கும்பிரண்டைச்சாற் தகட்டிற்பூசி வாய்ச்சுவிங்சகுகையில்ட்டுசில்லுமூடி,மெத்திட்டுபுடம்போடபற்பமாகும் விஸயமிது

மனுபானத்துடனேகொள்ள,சத்தித்தவலிகுன்மமெல்லாம்நீங்கி சத்தியமாய்பிர்மமதைச்சாதிப்போர்க்கே. (௰௮)

கேத்கண்டத்தான் வேர்தோலும் வேலிவித்து சிறுநாவல்விரையெருக்கன் வேரின்பட்டை, யித்தையிடித் தூளதனைசமனேசெய்து யிருக்தியுண்ணத்தேனுடனேயிருநேரந்தான், பத்தியுடன்மண்டலத்திலஷ்டகுன்மம்பயந்துவிடுமிம்மருந்தினுண்மைகண்டு,சுத்தமாய்ப்புசிப்புமிகவுண்ணச்செய்து சுரமளிககுங்குன்மவலிதுலேவுமாமே. (௰௯)

வரிக்கடுக்காய்தோற்குறுணி யிரும்பின்சிட்டம் வராகனெட்டுகாரம் வெடியுப்புமொட்டி, கரியபள்ளை ஆட்டுநீர்பதக்குவிட்டு கத்திரித்துபசும்பனையின் வோலேப்போட்டு, யிரவிபுடமிட்டிருநாள்வாலேயேற்றி சேசியிந்ததிராவகத்தையுண்டாயானல், பெருவபறுவிஷப்பாண்டு மகோதரங்கள் பேர்ந்தகலும்பத்தியமும்பிடிக்கத்தானே. (௨௰)

கல்லுப்புபுண்ணாக்கியிரும்பின்சிட்டம் கருந்தும்பைவகைனுலுஞ்சமனேசெய்து, நலலயெலுமிச்சஞ் சார்படிநாலுக்கு நாலிலொன்றுகத்தாழைசாறுங்கூட்டி, மெல்லியதாயறைத்ததனை யுலர்த்திக்கொண்டு மேலினியவ்பத்தாம்புரநாகங்கூட்டி, துல்லியதேனனுபானத்துடனேயுண்ண துடர்ந்தவஷ்டகுன்மங்கள் துலேயுந்தானே. (௨௧)

செம்பினுடவரப்பொடியும்பலமோரொட்டு செலுத்துமடிபாண்டத்தினுள்ளேவிட்டு, கொம்புகொண்டபாகிலேச்சார்பதக்களந்து கொட்டியெறி தீயெரிப்புகமலம்போல, கெம்பியிட்டச்சார்வத்திசாம்பலாக்கி கிண்டியனைகல்வத்திற்சாறவிட்டு, புடம்வேவிலலேதட்டி காயவைத்து பநம்புடமாயனலிட்டுப்பத்தப்போடே. (௨௨)

கருனூலிற்சேரானின்பாலேயூட்டி கடைக்கெண்டை சதைநடுவேமருகாலதன்னில், அறுநாளேதனித்துவிடகரணமாகும் ஆராவின்னெய்வேடபு துளிரளைத்துக்காச்சி, உறவாங்கடுகளவுமெழுகுபோட உணைந்தகளிம்பதையிடவுமுலரும்புண்ணு, விரைவாதமகலுமெனயாக்கோபுசொன்னர் விளம்பினேனவர்பேருவிளங்கத்தானே. ()

புண்டரிகக்கொழுப்பதனை காச்சநெய்யாம் போடதிலேகிராம்புரெண்டுபலமுள்ளாக, கிண்டிவழிவோயாழல்ரவியில்வைத்து கிளரிவரில்வங்கமதைவிட்டநெய்யை, யுண்டபின்புவுலத்தியதைதினமோரொட்டு யுண்டிடினுஞசுவாசமென்றமீராகமெல்லாம், சென்றிடுமேபொய்யாதுசெகத்தோர்க்கென்று செப்பினர்யாக்கோபுதிடமாய்த்தானே. (௨௪)

காரைவேராதொண்டை வேறும்நேராய் கண்டித்துயிருதூக்குகியாழமிட்டு, நீரதனைவடித்தபின்புகுழம்பதாக்கி நிறுத்துவர்கிராம்புரெண்டுபலமேபோட்டு, ஊரினபின்குழம்புடனே அரைத்துவுண

டை உருட்டியுண்ணவாதகுன்மம்சுவாசகாசம், தீருமென்றுயாக்கோ
புசொன்னாரித்தை செகத்திலவர்பேர்விளங்கசெப்பினேனே. (௨௫)

வெடியுப்புசேரரையில்நாழிதண்ணீர் விட்டுவொருசட்டிதனிற்
கரைத்துநீருள், அடிபடவும்நடுவிலிடுபுதுக்கலசத்தண்ணீர் அம்புவிட்
டுசட்டியினீரதிற்சேராமல்,வடிவுடனேமொங்கையைத்தான் சுழட்டிநீ
ருள் வகையுடனேகடிகையது வைத்துப்பின்னே, குடிக்கவிதைநீர்க்
கட்டுகுணமாமென்று கூறினார்யாக்கோபுகுவலயோர்க்கே. (௨௬)

கல்லாய்ந்தஜலமதுவும்படியுமைந்து கைக்கடங்கும்பிடியெடுத்து
தண்ணீரோடே - மல்லாந்துவிழுங்கிராப்படுக்கும்போது மண்டலத்
தில்மணியிறுகிக்கட்டுண்டாகும், பொல்லாதசயரோகம் மேகப்போக்கு
ம் புகலாதேயெவர்க்குமிதையுண்ணச்சொல்ல, செல்லாதவிடங்களி
லேசெலுத்தாதையென்றுசெப்பினார்யாக்கோபுதிறமாய்த்தானே.(௨௭

நீருமுள்ளி துட்டிடையின் விரைபிஞ்சுவாங்கி நெருங்கினின்
றகதலிபழம்பிதுக்கியொன்று சேரதுமுன்விரைகூட்டி பனியில்வைத்
து திண்ணுமெண்ணேழுநாளதிலேயுண்டு, நாரியரைசேராதேபுளி
யாகாது நலந்தருகும்விந்திருகிக்கட்டாமென்று, கூறினார்யாக்கோபுகு
வலயோர்க்கு கொண்டவர்பேர்தான்விளங்கக்கொடுப்பதாமே.(௨௮)

கசடருந்தகெந்தகமும்பலமுநான்கு காசிகுப்பிதனிலிறக்கிமணி
கட்போல, உசரவிந்துயப்ரவிபழுபபின்சாறு சூட்டிவிடுவத்தவத்த
வெய்யலிற்சேறு, பசப்படவேநாற்பதுநாள்தன்னிற்தயிலமாபாகாகும
னுபானத்துடனேயீய, திசைவிளங்காரோகமெல்லாம்குணமாமென்று
செப்பினார்யாக்கோபுதீருந்தானே. (௨௯)

பெருவாயன்பாலரைக்கால் படிநேருக்குள் பிச்சியதைகாலமே
கொண்டுநித்தம், யொருபொழுதியேழுநாள் கொடுத்தாயானால் ஊர
ந்துநின்ற, உட்காச்சல்ரத்தகாசம் குரையானசயரோகம்சுவாசகாசம்கு
ணமாகுமிம்மருந்தைமுக்கால்கொள்ள, பரையாதேபிரம்பிதனைகண்ட
தென்று பக்கிரியாக்கோபுதான்பகர்ந்திட்டாரே. (௩௰)

சுரைவிரையின்பருப்புவொருசேருவாங்கி சூட்சமுடனறுபலம்
நீர்தெளித்து, அரையதனைநீர்வாங்கயெண்ணெக்கக்கும் அத்தயிலம்
சீசாவிலடைத்துக்கொண்டு, புரையறவேநசியமிட்டு முழுகிவந்தால்
போய்விடுமேதும்பல்சலபீனிசங்கள், சிரசிலுள்ளரோகமெல்லாமகலு
மென்று செப்பினார்யாக்கோபுதிறமாய்த்தானே. (௩௧)

சுத்தித்ததாம்பரத்தைதகடதாக்கி சூக்ஷமுற்றுபெரியோர்களு
ண்ணுங்கர்ப்பம், மெத்திததுபுடம்போடுகனக்கவாரில் வெந்துதிருநீ
றுபோல்வெண்மையாகும், பத்தியத்தையனுபானத் துடனேயீய்ந்தால்

பலரோகம்குணமாகும்பசுமையாகும், சித்தத்தில்கருணைவைத்துயெ
ந்தன்மீதிற் செப்பினூர்யாக்கோபுதிறமாய்த்தானே. (௬௨)

சொல்லவெள்ளைவங்கமதுபலமேநாலுசுண்ணும்பிற்சுத்தித்துதெ
ளியகட்டி, முள்ளங்கிசாத்திலிட்டுமூணுசாமம் முருகலாயாக்கியபின்
கல்வத்திட்டு,துல்லியவெங்காயச்சார்முள்ளங்கிச்சார் துடர்ந்தரைத்து
நாலுநாளடுப்பிலேற்றி, மெல்லியநல்வாலுகையில்யெரித்துவாங்கி மி
ளகுநிறைகொள்ளவெகுவியாதிபோமே. (௬௩)

வெண்மெழுகுகல்லுப்புவகைக்குச்சேறு வெள்ளையென்றபாஷா
ணம்பலமும்காலு, வண்மையுடன்பொடித்துரவாய்க் கலையத்தேற்றி
வாலையிட்டுதணலேத்திதயிலம்வாங்கி, திண்மையென்ற வாதமென்ற
நோய்கட்கெல்லாம் தேய்ததிடவேகுணமாகும்சொரிசிறங்கு, புண்கள்
சிலையாறுமேமுதிரோகம் புகழ்ந்துரைத்தா ருண்மையெனப்பூட்டிப்
பாரோ. (௬௪)

சாறுமிருசோம்புகளையுடைத்துசாலில் சலம்பதக்குவிட்டுமதை
க்கவிழ்த்துமூடி, ஊறியநாளிரண்டதின்பின்வாலைவைத்து உற்பன
மாரியெத்துவடிதிராவகத்தை, வாரியிதைகுப்பிதனிற்றினமேகொள்
ள வாதபித்தம்மெய்யெரிவுதாகசோகம், நீரிழிவுவயரெரிவுசலத்ததா
கம் நிற்குமென்றுமுன்னோர்கள்நிகழ்த்தினூரே. (௬௫)

சந்தணமும்விழலவெட்டியேலம்சோம்பு சமநிறுத்துபொடியாக்
கிசாலிலூட்டி, சிந்திவிடுநீர்பதக்குயிருநாலூரில் செலுத்திவிடுவாலை
யிட்டுதிராவகத்தைவாங்கி, கந்தமுள்ளகற்பூரம் பொடித்துப்போட்டு
காசிகுப்பிதனிலிறக்கியுண்டாயானூல், யிந்துவின்போல்குளிந்துவுடல்
தாகசோகம் யெரிவடங்கிதண்மைமிகயியுந்தானே. (௬௬)

வாகுவைக்கோல்பிரியில்வெல்லம் தெளித்துகட்டி வந்தடையு
யிக்ரீகள்பக்ஷம்பின்பு, சிருதுழியாலிட்டுமூடிநீர்தெளித்து செய்யுமு
ளைபடர்ந்திடுமேபுதினூவெணறும், தருகிவைத்திடுநீர்பதக்குசாலே தண
லேத்திவாலையிட்டுதிராவகத்தைவாங்கி, பருகியிடவுண்டசமனசீரண
நதங்கி பசியெடுக்கும்வாதமரும்பலிதமாமே. (௬௭)

காவாட்டின்பூக்கதிரையிடித்துதூளாய் கவடதனிலிட்டு நீர்மித
க்கவிட்டு, ஆவாட்டின்பதமாகவெயிலிலிட்டு ஆரரைநாட்சென்றபின்
புவாலைமூட்டி, தீவாட்டயிறங்குகின்றதிராவகத்தை தினமந்திசந்தி
யுண்ணவாதக்கிராணி, காவுட்டம்செய்யாதவையம்போக்கி நயந்தரு
மேதீபனமும்நயந்துபாரோ, (௬௮)

போட்டகன்றவோமமதுபதக்குத்தூளாய் பொடியாக்கிசாலிலிட்டு
தூணிதண்ணீர், விட்டுயிருநாலூரில்வாலைவைத்து மெத்தெனவேயெ
றக்கவரும்திராவகத்தை,தொட்டகண்டமேலிலிட்டுகொண்டாயானூல்

குடச்சியுள்ள வாதமையங்கிராணிநீங்கி, உட்டணத்தின் வாதமைய ங்கிராணிநீங்கி ஊண்பெருகஉண்ணவைக்குமுண்மைதானே. (௩௯)

கனமெளகுஅரை தூக்குயுடைத்துநீருள் கலந்திருநாளூறியபின் காச்சலுண்டாய், முனைசொங்கலுண்டானபதத்தில்வாலை மூடியிது மணசெய்து அடுப்பிலெற்றி, அனலெரித்துதிராவகத்தைவாங்கிமேலே அமைத்துயிரு காசிடைநீகொண்டாயானால், வினையகலும்வாதமை யம் பித்தத்தாலே வரும்பிணிகளகற்றிவிடும் வழங்கிபாரே. (௪௰)

சதுர்மறையிலாய்ந்துணர்ந்து பலவோர்சொன்ன சாத்திரத்திலு ணர்ந்திருக்கும்துரவில்லாதே, முதலவனுதவிகொண்டுதொந்தித்தந்த மூலிகையாமாவுலிங்கந்தன்னினூடே,மதியுதையகாலமதிலுண்டுநித் தம் வாதமையத்தாலெழுந்தயிருமல்போகும், ஒருதிரமாகிலும்செ வியிற்கேட்டாரானால் ஒழுக்கமுண்டுகவிக்கெனவே செப்பினனே.()

செப்பினதோரமுதுமதுசேருமைந்து திரண்டிருக்கும்கற்கண்டு சேருமைந்து. அப்பதனிற்பாவாக்கியருண்முன்னுவில் அரைத்துநன் றுய்கிண்டியதைதேனைவிட்டு, ஒப்புரவாய்க்கிண்டியுண்ண மந்தகா சம் முயர்சுவாசகாசமொடுயிருமளீளை, துப்பிரவாகுணமாகுமுண்மை யித்தை சொடுலொண்ணுக்லககண்டசூட்சந்தானே. (௪௨)

ஒலித்திட்டவெளியாலேவைம்பூதத்தாலே உடலெடுத்தவினைய தனுலடர்ந்தரோகம்,வலித்திட்டஅடியயத்தில்சலத்தைகட்டில் வாண வுப்புகாரமிருவகையுங்கூட்டி,பலித்திட்டமருந்துரைப்பேன் பரையா தெங்கும் பாணிககுநாநாழிகருத்தடச்சை, குலித்திட்டுகாச்சியிருகார முப்பும் கூட்டியுண்ணநீர்க்கடுப்புகுணமதாமே. (௪௩)

காடிதெளித்தொதியத்தால்சாறுவாங்கு கல்லாய்ந்தஅயப்பொடி யால் மியக்கவிட்டு, சூடதிகவெய்யலில் வைத்துவாவா தொக்குநீர் விட்டுகிண்டிமூன்றுநாள்பின், கூடுகின்றமுன்சாத்தாலரைத்தரைத்து குவித்துமுட்டைபரும்புடமாயெட்டுந்தீர்த்து,போடுபின்புதண்ணீரா லரைத்துமூன்று புடம்போடமாதளையின்பூப்போலாமே. (௪௪)

ஆமிதனையனுபானத்துடனேயீய வரும்பிணிகள்வாதபித்தஜய த்தாலே, நேமிவருமநேகம்காரோகமெல்லாம் நீங்கிதிரிநாடிகளுமுறு ககுமேறி, காமசலம்பெருகிருகிவிந்துகட்டும் கண்கள்செவ்வரியேரிவீ ரம்செய்யும், தாமரைப்பூமணக்குமுடலிருகுநன்மாங் தளிர்மேனிவே ருமதுபாருந்தானே- (௪௫)

பாதிரிவேர்பட்டைதனைபாலிற்கொள்ள பத்தியமாங்கற்பத்தை பத்துநாளில், வாதமெழுங்கோபத்தால்கணுக்கள்வீங்கி வருத்தமி குஞ்சுரோணிதங்கள்மிகவுங்கொண்டு, சூதமுண்டுபாதகா மிகவும்

வீங்கி சுருக்கெனவேகுத்துகின்றசூலைநோய்கள், தீதகலும்பத்திபமா யுண்டாயானால் செயமாகுங்கண்டதிதுசெப்பிடாயே. (௪௬)

நற்பரங்கிபட்டைதனைசேரிரண்டு நன்றாகநறுக்கியதை செம்பு செப்பில், சிற்பரியபூசிபதில்பொடியைபோட்டு தீயெரியுமதுவொண் டுபடியுள்வார்த்து, பிற்பதிவாய்சில்லிட்டுசீலைசெய்து பிலக்கபூபுடத்தி லிட்டுவெட்டுந்தீர்த்து, கற்பமதைதிறந்தெடுத்து வடியேகட்டி காலை அந்திநேரமனாப்பலந்தான்கொள்ளே. (௪௭)

கொள்ளையிலேகாத்தைப்பற்றி புளிப்புகையும்வாதக் கூறுகரும் குளுணையொடுக்சப்பிணிப்பு, தள்ளியுண்ணமேகமுதல்வாதகுன்மம் தனுவலிப்புகணுபிடிப்பு வீசங்குத்தல், அள்ளியுண்டரசவேதைகை கறுப்பு மாராதரணங்கிரந்திகரங்கால்குத்தல், விளறுமிந்தரோகமெல் லாம்குணமதாகி மெய்யுடலைசுகப்படுத்தும்விஷயந்தானே. (௪௮)

நாயுருவிமுத்தினதாய்நருக்கிமிக்க நற்பசுவின்கோமியத்தில்நனை யப்பாண்டம், வாயிலிட்டுபருப்புடத்திலிரக்கிவாங்கி வைத்ததனை வெகுவிலே ல் மென்றுதின்ன, ரோயிலகுபருமந்தாரசுவாசகாசம் நுணு க்கிநடவீளைகண்டத்கரிப்புநீங்கி, காயமதைப்பிலப்பிக்கும்சித்தர்சொ ன்ன கற்பமிதுதப்பாதுகண்டுகொள்ளே. (௪௯)

பெருமரத்தின்பச்சைபட்டை தூக்குரெண்டு பிலத்தவட்டத்திரு ப்பிவேர் கணணீர்பாதி,கருக்கருக்கவடித்திடித்துகியாழம்வைத்து கா ச்சிவடிபுட்டிவெல்லமதுக்குகாலு, திரிகடுகில்நடுநீக்கி யேலம்கிராம்பு சீரகமிலவங்கிலைதோல்நாகமல்லி, மருவுகுரோசாணி யதிவிடையம் போஸ்தம் மணியபிணிசாபத்திரி சாதிக்காயே. (௫௰)

காயாதுவடித்திடித்து பாகுதன்னில் கலந்துவெள்ளாட்டு நெ ய்யுஞ்சேருவார்த்து, தியாக்கியிருகாசுயிடைதானுண்ண சீழ்மூலக்கி ராணிரத்தகடுப்புமாறும், நோயகலுங்குதவாதமாககிராணி நுணுக்கு மலமிரங்குமுன்னேரத்தம்சாய்க்கு, வாய்வுபித்தசேத்துமத்தின் பே திநீக்கி வைக்குமிதைபுகலாதேமனதில்வையே. (௫௧)

இபாக்கோபு அருளிச்செய்த

## திறவுகோல் சூத்திரம் - ௫௰.

முற்றிற்று.

---